30th March 1963]

MR. CHAIRMAN : The question is :

'That this House nominates the following three members to associate with the Committee on Subordinate Legislation of the Legislative Assembly for the financial year 1963-64'.

Dr. P. V. RAJAMANNAR.

Sri K. BALASUBRAMANYA AYYAR.

Sri M. SESHACHARIAR.

The motion was put and carried.

## V.—DISCUSSION ON THE EDUCATIONAL PATTERN—*cont.*

MR. CHAIRMAN : There is an amendment given notice of by the hon. Member Sri K. Rajaram. He may move the amendment and get it seconded.

SRI K. RAJARAM : Mr. Chairman, Sir, I move :

Add the following at the end :

"And on such consideration the House while approving the educational pattern enunciated in the note, is also of the opinion that History and Geography should also be subjects for examination."

SRI M. SESHACHARIAR : I second the amendment, Sir.

***கனம் திரு. எம். பக்தவத்சலம் :** தலைவர் அவர்களே, கல்வித் திட்ட விஷயத்தைப் பற்றி முதலில் நான் விளக்கிக் கூறினேன். அதற்கு அப்புறம் விவாதம் நடைபெற்றதிலே சில திருத்தங்களும் பிரேரேபிக்கப் பட்டு இருக்கின்றன. கனம் அங்கத்தினர் திரு. முத்துக்கண்ணப்பர் நான் சமர்ப்பித்த திட்டத்தை இந்த மன்றம் ஏற்றுக்கொள்ளுவதற்கு ஒரு பிரேரணையை, திருத்தத்தை தெரிவித்தார். இப்பொழுது கடைசியாக கனம் அங்கத்தினர் திரு ராஜாராம் அவர்கள் வேறு ஒரு திருத்தத்தைப் பிரேரேபித்தார். அந்தத் திருத்தத்தை அவர் பிரேரேபித்து, நான் விளக்கியபொழுது, வேறு ஒரு கருத்தை நான் தெரிவித்தேன். அது இந்தத் திட்டத்திலே இல்லாத ஒரு கருத்து. History, Geography இரண்டுக்கும் பரீட்சையே இல்லாத ஒரு நிலை இருந்தது. அது கூடாது, சரியல்ல என்று பல கல்வி நிபுணர்கள், ஆசிரியர்கள் தெரிவித்தார்கள். பரீட்சை இல்லை என்றால் History, Geography அவைகளின் முக்கியத்துவம் உணரப் படாமல் இருக்கலாம். பரீட்சை வைக்கவேண்டும் என்று எனக்குத் தோன்றியது என்றுதான் சொன்னேன். ஆனால் குறைந்தபட்ச மார்க் வைத்து, பரீட்சை வைப்பது என்றால் இப்போது electives ருக்கிறது. அதிகப் பாடம் பரீட்சைக்காக படிக்க வேண்டியதாய் இருக்கிறது. History, Geography-யில் குறைந்தபட்ச மார்க் வைத்தால் அது மாணவர்களுக்குக் கொஞ்சம் கஷ்டமாக இருக்கும் என்ற காரணத்தாலே, பரீட்சை வைப்பது, ஆனால் இந்திக்கு வைப்பதுபோல அந்தப் பரீட்சையில் கிடைக்கின்ற மார்க்குகள் moderation-க்குப் பயன்படாமல் இருந்தால், ஒரு குறை இருக்கும். பரீட்சைக்கும் purpose ஏற்படும். அம்மாதிரி நான் நினைத்துக்கொண்டு இருக்கிறேன் என்று சொன்னேன். அந்தக் கருத்தைத் தெரிவிக்கிற வகையிலேதான் திரு. ராஜாராம் அவர்கள் இந்தத் திருத்தத்தைப் பிரேரேபித்தார். அந்தத் திருத்தத்தை அரசாங்கம் ஏற்றுக்கொள்ளுகிறது என்று நான் முதலிலே கூறுகின்றேன்.

[ திரு. எம். பக்தவத்சலம் ] [30th March 1963

மற்ற திருத்தங்களைப் பற்றியும் நான் குறிப்பிடுகின்றேன். இந்த விவாதத்தில் கலந்துகொண்ட அங்கத்தினர்கள் பலர் இந்தத் திட்டத்தை, இந்தத் திட்டத்திலே காணப்படுகிற கருத்துக்களை ஆதரித்தே பேசினுர்கள். நமது எதிர்க் கட்சித் தலைவர் அவர்கள் இதிலே குறை காணவில்லை. ஆதரித்தே பேசினுர்கள். இதிலே குறை கண்டவர்களுக்கும் ஒருவாறு விளக்கம் அளித்தார்கள். ஆனல் அதைப் பற்றிப் பேசிய கனம் அங்கத்தினர் வஹாப் அவர்கள் வருத்தப்பட்டார்கள். கனம் எதிர்க் கட்சித் தலைவர் இப்படி அரசாங்கத்திலே கொண்டுவந்ததை அப்படியே அவரைக் கேட்டு இவர் செய்தார், இவரைக் கேட்டு அவர் செய்தார் என்ற கற்பனையோடு, ரொம்ப அழகாக எடுத்து விமரிசனம் செய்தார்கள். இப்பொழுது கனம் எதிர்க் கட்சித் தலைவர் மட்டும் பேசி பரிபூரணமாக ஆதரிக்கவில்லை. அவர் இதை ஆதரிக்கும் வகையில் பேசினுர்கள். அதைவிட இன்னும் விளக்கமாக கனம் அங்கத்தினர் டாக்டர் சிதம்பரநாதன் அவர்கள் சீரிய முறையில் இதை எடுத்து விளக்கிக் கூறினுர்கள். அவர்களுக்கு நான் கடமைப் பட்டிருக்கிறேன். கனம் அங்கத்தினர் திரு. சீனிவாசவரதன் அப்படியே விளக்கிப் பேசினுர்கள். கனம் அங்கத்தினர் திரு. ராஜா அய்யர் அவர்கள் பேசி, விளக்கி, இரண்டு மூன்று குறைகளை எடுத்துச் சொன்னுர்கள். கண்மூடித்தனமாக ஒப்புக்கொள்ளவில்லை. அவர் கண்ட குறைகளை எடுத்துச் சொல்லி பொதுவாக இதில் அடங்கிய கருத்துக்களை ஆதரித்தார்கள். எதிர்க்கட்சி சொல்லுவதை ஆளுகின்ற கட்சி ஏற்றுக்கொள்ள வேண்டும், அல்லது ஆளுகின்ற கட்சி சொல்லுவதை எதிர்க்கட்சி ஏற்றுக்கொள்ளக் கூடாது என்ற ஒரு சம்பிரதாயமும் இல்லை. ஏதாவது இதில் நல்ல அம்சமாக இருந்தால் ஏற்றுக்கொள்ள வேண்டும். ஆனல், நான் முன்பே சொன்னேன். எல்லோரையும் கலந்துதான்—அதுவும் கல்வித்துறையில், அனுபவம் உள்ளவர்களைக் கலந்துதான்—இந்தத் திட்டம் உருவாக்கப்பட்டு இருக்கிறது என்று சொன்னேன். அதை அரசாங்கம் ஏற்றுக் கொண்டிருக்கிறது. அரசாங்கம் ஏற்றுக்கொண்டிருக்கிறது என்று எதிர்க் கட்சியில் உள்ள கனம் உறுப்பினர்கள் ஒப்புக்கொள்கிருர்கள். அவர்கள் ஏன் ஒப்புக்கொள்கிருர்கள் என்ருல் கனம் அங்கத்தினர் வஹாப்—அவருக்கு ஏற்பட்ட ஆச்சரியத்திற்கு விளக்கம் கூற விரும்புகிறேன். அவர் இதை அரசியல் கண்ணேட்டத்தோடு பார்க்கிருர். அரசியல் கண்ணேட்டத்
3-40 p.m தோடு பார்க்காமல் இது நம்முடைய குழந்தைகளுக்கு நல்ல படிப்பு முறையா என்று பரிசோதனை செய்தால், அது திருப்தி அளிக்கிறது. நம்முடைய குழந்தைகளுக்கு உகந்த கல்வித் திட்டமா என்பதை அவர்கள் ஆராய்ந்து அவர் மனதுக்கு திருப்தி ஏற்பட்ட பிறகு அதை அவர்கள் ஒப்புக்கொள்வதாகக் கூறினுர்கள், ஆதரிப்பதாகக் கூறினுர்கள். மற்றவர்களுக்கு இது நல்ல திட்டமாகத் தோன்றவில்லையென்ருல், எல்லோருக்கும் அந்த அரசியல் கண்ணேட்டம் இல்லை. கல்வித் துறையில் அனுபவம் உள்ளவர்களுக்கு வேறு குறைகள் இருக்கலாம். எப்பொழுதும் நிபுணர்கள் ஏக மனதாக அபிப்பிராயம் கொள்வார்கள் என்று எதிர்பார்ப்பதற்கு இல்லை. ஆனல் அரசியல் கண்ணேட்டத்துடன் பார்க்கிறவர்களுக்கு அது விபரீதமாகவும் தோன்றலாம். ஆனல் நான் முன்பே விளக்கியபொழுது, "கல்வித் துறையிலே அரசியலைப் புகுத்த வேண்டாம்; நம்முடைய மாணவ மாணவிகளுக்கு எது நல்லது என்று ஆராய்ந்து, இதை நாம் பரிசிலீன செய்யவேண்டும்" என்று கேட்டுக்கொண்டேன். இப்பொழுது கனம் அங்கத்தினர் அன்பழகன் அவர்களும் கனம் அங்கத்தினர் வெங்கடாசலம் அவர்களும் இந்தத் திருத்தத்தைக் கொடுத்து இருக்கின்ருர்கள். இந்தத் திருத்தத்தைப் பிரேரேபித்து கனம் அங்கத்தினர் திரு. வெங்கடாசலம், ஏதோ கொந்தளிப்பு ஏற்பட்டுவிடும், ஏதோ அரசாங்கம் தட்டிக் கழிக்கிறது என்று எல்லாம்கூடக் கூறினுர்கள். கொந்தளிப்பு ஏற்படுகிறது என்ருல் அவர் தவிர்ப்பதற்கு முற்படவேண்டும். இதில் கொந்தளிப்புக்கு இடமில்லை. மாணவர்களுடைய முன்னேற்றத்திற்கும் அறிவு வளர்ச்சிக்கும் யாரும் குறுக்கே நிற்கக்கூடாது. கொந்தளிப்பு என்ற வார்த்தை சரியல்ல, அதை மக்கள் பார்த்துக்கொண்டு இருக்க மாட்டார்கள், அதை மக்கள் அனுமதிக்கமாட்டார்கள். தமிழ் நாட்டிலுள்ள மாணவ மாணவிகளுக்கு தாங்கள் நல்ல அறிவு பெறவேண்டும், போதிய அறிவு பெறவேண்டும் என்ற விழிப்பு இருக்கிறது. அறிவும் அவர்களிடம் இருக்கிறது. அதற்கு குறுக்கே யாரும் நிற்கக்கூடாது. எந்த அளவில்

30th March 1963] [திரு. எம். பக்தவத்சலம்]

திட்டத்தை உருவாக்கி, நிறைவேற்ற, அவர்களுக்கு வழி காட்ட முடியுமோ, அந்த அளவில் வழி காட்ட வேண்டும் என்ற நோக்கத்தோடு தான் அரசாங்கம் இந்த வேலையில் ஈடுபட்டு இருக்கிறது. அதற்குரிய திட்டங்களைத்தான், கல்வித் துறையில் அனுபவம் உள்ளவர்கள், மற்றவர்கள் எல்லோரையும், கலந்து ஆலோசித்து, முக்கியமாக ஆசிரியர்களைக் கலந்து ஆலோசித்து, உருவாக்கி இங்கே கொண்டு வந்து இருக்றோம் என்று நான் முதலிலே கூற விரும்புகிறேன்.

இப்பொழுது இந்தத் திருத்தங்களை ஒவ்வொன்றாக எடுத்துக்கொள்ளலாம் :—

முதல் திருத்தம் :

**'Introduction of Public examination in Part II for S. S. L. C. and the proposal that the marks obtained will be counted for moderation.'**

நான் முன்பே விளக்கினேன். ஹிந்தியிலே முன்பு இருந்த நிலை **3-வது, 2-வது Part** மொழியிலே, **3** மொழிக்கொள்கை. ஆனால் இங்கே சில அங்கத்தினர்கள் மூன்று மொழி வேண்டாம். இரண்டு மொழி போதும் என்று சொன்னார்கள். மூன்று மொழி அவசியம் என்பது முன்பே எற்றுக் கொள்ளப்பட்ட விஷயம். இன்றைக்கு ஒரு விளக்கம் கூற விரும்புகிறேன். கனம் அங்கத்தினர்கள் கூறினார்கள். நாம் தான் மூன்று மொழி படிக்கிறோம். ஹிந்தி பேசப்படுகிற, ஹிந்தியைத் தாய் மொழியாகக் கொண்ட பிராந்தியத்தில் மூன்று மொழி படிக்கிறார்களா என்றால், மூன்று மொழிக் கொள்கை எல்லா மாநிலங்களுக்கும் இல்லையா ? அங்கே ஹிந்தியை தாய் மொழியாகக் கொண்டவர்கள் **Part II**-ல் எதாவது ஒரு மொழி கற்க வேண்டும், இங்கே தென்னாட்டில் உள்ள மொழியை அவர்கள் கற்க வேண்டும், அது முக்கியமானது என்பது பிரதம மந்திரி அவர்கள் உள்பட எல்லோராலும் வற்புறுத்தப்படுகிற விஷயம். அதை எல்லா மாநிலங்களும் எற்றுகொண்டிருக்கின்றன. எந்த அளவுக்கு அவர்கள் நிறைவேற்றிக் கொண்டு இருக்கிறார்கள் என்று புரியவில்லை. ஆனால் கொள்கை அளவில் வட நாட்டிலே இருக்கிற மாநிலங்கள் ஹிந்தியை தாய் மொழியாகக் கொண்டவர்கள், மூன்று மொழியை எற்றுக் கொண்டிருக்கிறார்கள். மூன்று மொழிக்கொள்கையைப் பற்றி கல்வி அமைச்சர்கள் மாநாட்டிலே, டெல்லியிலே நடந்த மாநாட்டில், யாரும் மூன்று மொழி வேண்டாம், இரண்டு மொழி போதும் என்று சொல்லவில்லை. இந்தியைத் தாய்மொழியாகக் கொண்டவர்கள் வேறு மொழி கற்க வேண்டும், ஆங்கிலம் கற்கவேண்டும். இதை எப்படி நிறைவேற்ற வேண்டுமென்று பரிசீலனை செய்ய ஒரு குழு அமைக்கப்படுகிறது. நம்முடைய மாநிலத்திலே **Official Language Commission** என்ன தெரிவித்தது ? இது கட்டாய பாடமா, இஷ்ட பாடமா என்று கேட்கிறார்கள். வார்த்தையை வைத்துக் கொண்டு விமர்சனம் செய்யலாம். ஓரளவு கட்டாயம் இருக்க வேண்டும். ஆனால் கட்டாயத்திலே ஓரளவு கூடிய வரையில் பயத்தைத் தடுக்கவேண்டும். இது ஒரு **Reactionary sign**-ஐ உண்டாக்குகிறது என்பது என் எண்ணம்.

**திரு. க. அன்பழகன் :** அமைச்சர் அவர்கள் வட நாட்டிலே உள்ள மாநிலங்களிலே மூன்று மொழி பயல வேண்டும், அது தென் இந்திய மொழியிலும் ஒன்றாக இருக்க வேண்டும் என்று ஓரளவு எற்றுக்கொள்ளப்பட்டு வருகிறது, மத்திய சர்க்காரும் அந்தக் கருத்தை எற்றுக்கொள்கிறார்கள் என்று அறிவித்தார்கள். கல்வி முறை பற்றிய குறிப்பில் **21**-ம் பக்கத்தில் கடைசி பாராவில் " கமிஷன் தனது முடிவுகளின் விளைவாக இந்தி பேசும் மாநிலங்களிலுள்ள மாணவர்கள் இரண்டு மொழிகளும், இந்தி பேசாத மாநிலங்களிலுள்ள மாணவர்கள் மூன்று மொழிகளும் கற்க வேண்டி வரும் என்பதை உணர்ந்து இந்தி பேசும் மாநிலங்களிலுள்ள மாணவர்கள் உயர்நிலைப் பள்ளிகளில் மற்றொரு இந்திய மொழியை (ஒரு தென்னிந்திய மொழி) கட்டாயமாக கற்க வேண்டுமென்று ஆலோசனை

வழங்கப்பட்டது. இதைக் கமிஷன் பரிசீலனை செய்து தள்ளி விட்டது என்று குறிப்பு தரப்படுகிறது. இதற்குப் பிறகு தென்னிந்திய மொழிக்கு இடம் கிடைக்கும் என்று அமைச்சர் நம்புகிறார்களா ?

**கனம் திரு. எம். பக்தவத்சலம் :** இந்தக் கமிஷன் தள்ளிவிட்ட பிறகு பின்னால் ஏற்றுக்கொள்ளப்பட்டு இடம் கொடுத்து இருக்கிறது. இப்போது எல்லா மாநிலங்களிலும் ஆட்சியாளர்களால் ஏற்றுக்கொள்ளப்பட்டு இருக்கிறது. நடத்துவது வேறு விஷயம். ஆனால் இது ஏற்றுக்கொள்ளப்பட்டு இருக்கிறது. இப்போது கட்டாய பாடமாக ஓரளவு வந்ததே தவிர, இதனால் முதலில் இருந்து, கட்டாய பாடமாக இருந்து குறைந்தபட்ச மார்க் வைத்தால் இந்த மாநிலத்திலே உள்ள மாணவர்கள் இந்தியைக் கற்று போதிய மார்க் வாங்க முற்படுவார்கள். மார்க் வைக்காமல் பரீட்சை என்று வைத்தாலும் வகுப்பு இருக்கிறது. இந்த நிலையிலே எல்லா மாவட்டங்களிலே சென்று ஆசிரியர்களுடன் கலந்து பேசியபோது அவர்கள் சொன்னார்கள், 'இதில் ஒரு purpose இல்லாமல் ஒரு பரீட்சை வைத்தால் மாணவர்களுக்கு அலட்சியம் ஏற்படுகிறது. மற்ற பரீட்சைகள் demoralise ஆகி இருக்கிறது என்று சொன்னார்கள். அதை ஒட்டித்தான் நாங்கள் அப்படி purpose இல்லாமல் ஒரு பரீட்சை என்றால் மாணவர்களுக்கு ஒரு அலட்சிய புத்தி ஏற்படக் கூடாது, வேறு முறையில் கவனிப்பதற்கு அவகாசம் இல்லை. ஆனால் இப்போது பரீட்சை உடனே வருகிறது. purpose இல்லாமல் ஒரு பரீட்சை எதற்கு ? இந்த வருஷம் பரீட்சை வேண்டாம், பரீட்சை எந்த அளவுக்கு வேண்டும், எப்படி இருக்க வேண்டும் என்று பின்னாலே யோசித்துக் கொள்ளலாம் என்று இந்த ஆண்டுக்கு பரீட்சை வேண்டாம் என்று சொன்னேன். ஏதோ நான் பரீட்சை வேண்டாம் என்று சொன்னேன் என்று வரவேற்றார்கள் சிலர். ஆனால், இப்போது மத்திய அரசாங்கம் உத்தரவு போட்டுவிட்டது. அந்த உத்தரவுக்கு இணங்கி மறுபடியும் பரீட்சை வைத்துவிட்டேன் என்று சொன்னார்கள். தாங்கள் தவறான எண்ணம் வைத்துக்கொண்டு இருக்கின்ற காரணத்தால், அப்படிச் சொல்லுகிறார்கள். மத்திய அரசாங்கம் உத்தரவு போடவில்லை. உத்தரவு போட மாட்டார்கள். Parliament-ல் கேட்கப்பட்டபோது, உள்நாட்டு அமைச்சர் அவர்கள் சென்னை அரசாங்கம் இம்மாதிரி பரீட்சையை எடுத்து இருக்கின்றது என்றால் சில காரணங்கள் இருக்கவேண்டும் என்று அவர்கள் விளக்கி இருக்கிறார்கள். நாம் எந்த நிலையிலே அதை ஏற்பாடு செய்தோம் என்பதை ஒருவாறு உணர்ந்துதான் இக்கருத்தைத் தெரிவித்திருக்கிறார்கள். அதற்கு உடனே explanation கொடுக்கவில்லை. எங்களைக் கேட்கத் தேவையில்லை. நடுங்கி நான் மறுபடியும் பரீட்சை வைத்தேன் என்பது இல்லை. Purpose இல்லாமல் பரீட்சை வேண்டாம் என்றேன்.

3-50 p.m. மத்திய ஆட்சியில் scholarship கொடுக்கிறார்கள். இந்தியிலே mark வாங்கியிருந்தால் அதற்கு சில scholarship இருக்கிறது. இந்தி பரீட்சை எழுதி மார்க் வாங்கியிருந்தால் அந்த scholarship கிடைக்கும். பரீட்சை இல்லாமல் இருந்தால், போதிய அளவுக்கு அந்த வாய்ப்பு இல்லாமல் போய்விடும். அப்போது பரீட்சை இல்லை என்றால் ஒரு சிலர் பாதிக்கப்படுகிறார்கள். ஆலோசனைக் கமிட்டிக் குழுவிலே கலந்து ஆலோசிக்கும்போது eligibility-க்குப் பரீட்சை வேண்டாம் என்றார்கள். இந்தியிலே mark வாங்க வேண்டும். வாங்கிவிட்டால் பயன்படும். வாங்கவில்லையென்றால் அது பற்றிக் கவலை இல்லை. அது அவர்கள் fault. eligibility-க்கு பாதிக்கப்பட மாட்டார்கள். அசல் பரீட்சை வைத்தால் ஒரு purpose இருக்கும். Purpose இருந்தால் பரீட்சை வைக்கலாம் என்ற வகையிலே தான் பரீட்சை. பரீட்சை எழுதுவதினாலே அது இஷ்ட பாடமாக இருந்து இப்போது கட்டாய பாடமாகப் போய்விட்டது என்று சொல்லுவது பெருமை. வகுப்பிலே எப்படியும் இருக்க வேண்டும். என்னதான் இருந்தாலும் யாரும் காதிலே பஞ்சு அடைத்துக்கொள்வதில்லை. அப்படி யாரும் மாணவர்கள் இருப்பதாகத் தோன்றவில்லை. இப்படித் தீவிரமாகப் பேசுகிறவர்கள் அவர்கள் குழந்தைகளுக்கு இந்தி கற்றுக்கொடுக்கிறார்கள். அதை நான் பார்த்துவருகிறேன். வகுப்பிலே உட்காருவது இப்போது கட்டாயமாக இருக்கிறது. பரீட்சைக்கு உட்காருவது கட்டாயம் இல்லை. இப்

போது Public Examination இல்லை என்று வைத்தோம். மற்ற விதத்தில் இப்போது பரீட்சையிலே எழுதுகின்றவர்கள் நன்றாக எழுதினால் பயன்படும். வேறு எதிலே mark குறைந்தாலும் பயன்படும். இது பற்றி கவலை இல்லை என்றால் இந்த mark வாங்க வேண்டாம். eligibility-க்கு இவர்கள் பாதிக்கப்பட மாட்டார்கள். படிக்க வேண்டும் என்ற எண்ணம் இருக்க வேண்டும். மாணவர்களுக்கு அது நல்லது என்று அரசாங்கம் நம்புகிறது. அப்படி மாணவர்களும், பெற்றோர்களும் நம்புகிறார்கள். கட்டாயப்படுத்தினால் அவர்கள் பாதிக்கப்படுவார்களா ? Eligibility mark வேண்டாம் என்று முன்பு பரீட்சை இல்லை என்று சொன்ன தற்கு இப்போது பரீட்சை இருக்கிறது, என்றால் eligibility mark இருக்கிறது. Moderation-க்கு mark என்று சொன்னால், முன்பு இஷ்ட பாடமாக இருந்தது இப்போது கட்டாய பாடமாக இருக்கிறது, என்று சொல்லுவது எனக்குப் புரியவில்லை. ஆனால் இன்னொன்று சொல் வது விசித்திரமாக இருக்கிறது. 'நான் படிக்காமல் போகிறேன்' என்று சொல்கிறார்கள். படிக்கிறவன் படிக்கட்டுமே. இன்னொருவன் mark வாங்குவதை சிலர் ஒப்புக்கொள்வதில்லை. இதற்கு ஒரு உதாரணம் கூறு கிறேன். பழைய காலத்தில் பெரிய மனிதன் வீட்டில் ஒரு குழந்தை இருக்கும். அது dull ஆக இருக்கும். தூர பந்துவினுடைய பிள்ளை ஏழைக் குழந்தையாயிருக்கும், ஆனால் புத்திசாலியாக இருக்கும். அந்த dull குழந்தை வீட்டிலே இருக்கின்ற தாய் புத்திசாலிக் குழந்தையைப் பார்த்து, என்ன சொல்வாள் என்றால், "நீகூட III Form-ல் இரு. IV Form-க்கு போகக் கூடாது" என்று சொல்வாள்.

**திரு. க. அன்பழகன் :** Moderation என்றால் என்ன என்று விளக்க வேண்டும்.

**கனம் திரு. எம். பக்தவத்சலம் :** ஒவ்வொரு subject-லும் குறைந்த பட்சமாக எவ்வளவு வாங்கவேண்டும் என்று இருக்கிறது. University யிலே கூட இந்த நிபந்தனை இருக்கிறது. ஏதாவது ஒரு subject-லே மார்க் குறைந்தால் மாணவன் fail ஆவான். ஒரு subject-லே minimum வாங்காமல் போய்விட்டால் மொத்த mark அதிகமாக இருந்தால் அப்போது moderation mark கொடுத்து அவர்களை பாஸ் செய்ய வைக் கிறார்கள். அதற்கு ஒரு அளவு வைத்து இருக்கிறார்கள். 5, 10 என்று வைத்திருக்கிறார்கள். இந்த moderation இல்லை என்றால் failure ரொம்ப அதிகமாக இருக்கும். Pass ரொம்ப குறைவாக இருக்கும். இது ரொம்ப நாளாக நடக்கிறது. அதற்குப் பயன்படுவதாக இருந்தால் பயன் படட்டும். அவனை யாரும் கட்டாயப்படுத்தவில்லை. குறைந்த பட்ச Mark வாங்க வேண்டும் அந்த அளவுக்கு "படி" என்று கட்டாயப்படுத்த வேண்டும். படிக்கவில்லை என்றால் அவன் பாடு. இது ஏதோ பிரமாத மாக எடுத்து இந்தியில் பரீட்சை வைத்து விட்டார்கள் என்றால் அது பேச்சு வார்த்தையாக இருக்கும். ஜனங்கள் நம்பமாட்டார்கள். ஜனங் கள் விழித்துக்கொண்டு இருக்கிறார்கள். பேச்சு வார்த்தையாக வைத்து பேசுவதிலே பிரயோசனம் இல்லை. இந்தியும் படிக்க வேண்டும். படிப்பது நல்லது. பாரமாக இருக்காது. இந்த முறையில் இந்த Formula அமைந்து இருக்கிறது. History, Geography-க்கு கூட கனம் அங்கத்தினர்கள் பொதுவாக பரீட்சை இருக்கவேண்டுமென்று சொன்னார்கள். அரசாங்க சார்பில் இந்த விளக்கத்தைக் கூற விரும்புகிறேன். Minimum Mark வைத்தால் பொருத்தமாக இருக்கும். இந்திக்கு வைத்த மாதிரி இந்த பரீட்சை moderation-க்கு உபயோகப் படக்கூடிய அளவில் அரசாங்கம் ஏற்றுக்கொள்ளலாம் என்ற அந்தத் திருத்தத்தை இந்த விளக்கத்தோடு ஏற்றுக்கொள்கிறேன். சர்க்கார் உத்திரவைக் காட்டி கனம் அங் கத்தினர் டாக்டர் சிதம்பரநாதன் அவர்கள் விளக்கினார்கள். எந்தச் சூழ் நிலையில் அது போடப்பட்டது ? எந்த முடிவாக இருந்தாலும் எப் படியும் ஹையர் செகண்டரி பள்ளிகளில் வரப்போகிறது. எல்லாம் தமிழ் மொழியில் வருகிறது. ஆகையால் ஒன்றை மாத்திரம் எடுத்துக்கொள்ளக் கூடாது. ஒரு பாரா, ஒரு செண்டன்ஸ், மாத்திரம் எடுத்துக்கொண்டு பார்க்கக் கூடாது. இந்த வெள்ளை அறிக்கையில் ஹையர் செகண்டரியில் வருமென்று இருக்கிறது. டாக்டர் சிதம்பரநாதன் அவர்கள் அதைத் தான் விளக்கினார்கள். அந்த உத்தரவில் இந்த வாக்கியம் இருக்கிறது.

**It will be open to private colleges to continue to provide English medium instruction in the B. A. degree courses even after the change-over is effected ; but no grant will be payable by the State Government in respect of such courses.**

**திரு. க. அன்பழகன் :** அமைச்சர் அவர்கள் சொல்கிற இந்த விளக்கத்தில் அரசாங்கக் கல்லூரிகளில் எல்லாம் பயிற்சிமொழியாகத் தொடங்கவிருக்கிற காரணத்தால் தனியார் கல்லூரிகளில் ஆங்கிலம் அனுமதிக்கப்படும் என்று அன்று இட்ட ஆணையையே கூறினார். அதனால் கல்லூரிகளில் தமிழே பாடமொழியாகும் என்பது உறுதி கூறப்பட்டது. அது ஒரு புறம் இருக்க ஹையர் செகண்டரி வகுப்பு நடத்தமுடியாத நிலையில் ஐந்து ஆறு ஆண்டு காலம் இருந்தும் பி. யூ. சி. வகுப்பில் தமிழில் கலையியல் பாடங்களை நடத்த அரசாங்கம் என்ன நடவடிக்கை எடுத்துக் கொண்டது ?

**கனம் திரு. எம். பக்தவத்சலம் :** நேற்று பேசிய அங்கத்தினர் அவர்கள் ஹையர் செகண்டரி கோர்ஸ் ஏன் வைக்கவில்லை என்று குறைப்பட்டார்கள். அதை வைத்திருந்தால் நன்றாக இருக்குமென்று குறிப்பிட்டார்கள். தமிழை கல்லூரிகளில் போதனைமொழியாக வைப்பதற்கு ஏற்பாடு செய்வதாக இருந்தால் பி. யூ. சி. யில் வைக்கலாம். எம். எஸ். சி.க்கும் உத்தரவு போடலாம். எல்லாவற்றிற்கும் உத்தரவு போட்டுவிடலாம். நடக்கவேண்டாமா ? பி. யூ. சி. க்கும் அதிகமான புத்தகங்கள் வேண்டும். டெக்ஸ்ட் புக் போதாது. இப்போது இல்லை. புதிதாகப் புத்தகம் எழுதலாமென்றாலும் அது போதாது. கல்லூரிப் படிப்பு என்றால் அதிகமாகப் புத்தகங்கள் வாசிக்க வேண்டும். சர்க்கார் கல்லூரி வரி கொடுப்போர் எல்லோருக்கும் பயன்படக்கூடியது. நமக்கு ஒரு அபிப்ராயம் இருக்கிறது என்று உத்திரவு போட்டுவிட்டு மற்றவர்களை வெளியே போங்கள் என்று சொல்வது நியாயமாகாது. தமிழ் போதனா மொழி பற்றி கூறுகிறவர்களிடம் ஆத்திரப்படுகிறேன் என்று அன்பழகன் சொன்னார். நான் ஏன் ஆத்திரப்படுகிறேன் ? இருக்கிறதைத்தானே சொல்லுகிறேன். இதில் மறைப்பதில் என்ன பயன் ? அனுபவமுள்ள ஆசிரியர்கள் இருக்கிறார்கள். மாணவர்களுக்கு அடிக்கடி சொல்வார்கள். சக ஆசிரியர்களுக்குச் சொல்வார்கள். இதை மறைப்பதில் என்ன பிரயோஜனம் ? மாணவர்களை ஊக்குவிக்க வேண்டியதுதான். கோயம்புத்தூரில் எகனாமிக்ஸில் மாணவர்கள் குறைவாக இருக்கிறார்கள். ஊட்டி கவர்ன்மெண்ட் காலேஜில் இல்லை. மாணவர்களை நாங்கள் ஏன் ஊககுவிக்கவில்லை என்கிறார்கள். தமிழில் படித்தவர்களுக்கு ரூ. 30 ஸ்டைபண்ட் கொடுத்தால் போதாது என்று தமிழில் படிப்பது யாருக்காகவோ செய்கிற மாதிரி பெரிய காரியமாகப் பேசுகிறார்கள். தமிழில் படித்தால் உத்தியோகத்திற்குக் கியாரண்டி கொடுக்கவேண்டுமாம். எப்படிக் கொடுப்பது ? எத்தனை பேருக்கு உத்தியோகம் கொடுப்பது ? ஆயிரக் கணக்கான மாணவர்கள் தமிழில் படித்தால் அத்தனை பேருக்கும் உத்தியோகம் கொடுத்துவிட முடியுமா ? உத்தியோகத்துக்கா படிப்பது ? மேலும் மேலும் அறிவை வளர்ப்பதற்குத்தானே படிப்பது ? இப்படிப் பேசுவது மாணவர்களைக் கெடுப்பதாகத்தான் வரும். உத்தியோகத்திற்குத்தான் படிப்பு, பரிட்சையில் பாஸ் செய், கியாரண்டி கேளு, இல்லையென்றால் ஸ்ட்ரைக் செய் என்றால். . . . . .

*** திரு. க. அன்பழகன் :** அமைச்சர் அவர்கள் சொல்லுவதுபோல உத்தியோகத்துக்குதான் படிப்பு என்ற கருத்தில் இங்கு யாரும் பேசவில்லை. அலுவல்களுக்குத் தேர்ந்தெடுக்கும் போது தமிழில் படித்தால் கைவிட்டுவிடுவார்களா என்ற அச்சம் அவர்களுக்கும் இருக்கும் என்று கூறப்பட்டது. தமிழில் படித்தாலும் அலுவலர் தேர்வுக்குச் சமநிலையில் வைத்து கருதப்படும் என்று உறுதி தருவதற்குத் தமிழை ஆட்சி மொழியாக ஏற்றுக்கொண்டிருக்கிற அரசாங்கம் முன்வர வேண்டுமென்றுதான் சொல்லப்படுகிறது.

4-00 p.m. **கனம் திரு. எம். பக்தவத்சலம் :** இன்றைக்கு மட்டும் தெரிவிக்க வேண்டிய அவசியம் இல்லை. என்றைக்கும் அந்த உறுதியைத் தருகிறேன். அந்தத் திருத்தத்தை அங்கத்தினர் வாபஸ் வாங்கிக் கொள்ள

லாம் (சிரிப்பு). தமிழ் மொழி மூலம் போதனுமொழியாகப் படித்தால் வேலை கொடுப்பது என்பது எம்.பி.எஸ்.சி.யிடம் இருக்கிறது. அதில் தலையிட முடியாது. தமிழை வைத்து டிகிரி வாங்கியவர்களுக்கு சலுகை கொடுப்டேன், உத்தியோகம் கொடுப்பேன் என்று சொல்ல மாட்டேன். சரிசமமாகக் கருதப் படுவார்கள் என்று சொல்லியிருக்கிறேன். நேற்று அங்கத்தினர் கூறியது கியாரண்டி கொடுக்கவேண்டுமென்று. தமிழ் மூலம் படித்தால் உத்தியோகத்திற்கும் கியாரண்டி கொடுக்கவேண்டுமென்ருர். ஏராளமான பேர் தமிழில் படிக்கவேண்டுமென்று. விரும்புகிறபோது கியாரண்டி கொடுத்தால் அதிகமாக வருவார்கள் என்று மாணவர்களிடையே தவருன கருத்து ஏற்படுத்தக்கூடாது என்று கேட்டுக்கொள்கிறேன். ஆகையால் 1963–64-ல் என்ருல் எப்படிச் சேர்ப்பது ? இந்த ஜி.ஓ.வில் இருக்கிறது அடுத்த ஜூன் கல்வி ஆண்டில் கொண்டுவர வேண்டுமென்று. அது முடியுமா என்று பார்க்கவேண்டும். திருத்தத்தைக்கொடுப்பவர்கள் இது சாத்தியப்படுமா என்று யோசிக்கவேண்டும். எத்தனை கஷ்டங்கள் இருக்கின்றன. இயன்ற அளவுக்கு புத்தகங்கள் போட்டுக் கொண்டிருக்கிறோம். 1,000 புத்தகங்கள் போடலாம் என்று சொல்லிவிடலாம். கெமிஸ்ட்ரி, சோஷியாலஜி, ஸூவாலஜி இவற்றிற்கெல்லாம் ஆயிரம் புத்தகங்கள் வேண்டுமென்று டெண்டர் கேட்கமுடியுமா ? அதற்கெல்லாம் எழுதவேண்டும். கனம் எதிர்க் கட்சித் தலைவர் அவர்கள் சொல்லிய மாதிரி டிரான்ஸ்லேஷன பிரயோஜனமில்லை. கிளாசிக் வொர்க்ஸ் வேண்டும். ஆசிரியர்களாக எழுதவேண்டும். தமிழ் பப்ளிகேஷனுக்கு என்று ஒரு பீரோ அமைத்திருக்கிறோம். பல்கலைக்கழகம் மிகுந்த ஆர்வத்துடன் ஒத்துழைத்திருக்கிறது. பல ஆசிரியர்களுக்கு அவர்கள் அனுமதி கொடுத்திருக்கிறார்கள். 50 ஆசிரியர்கள் வேண்டும், பல விஷயங்களைப் பற்றி எழுதுவதற்கு என்று சொல்லி ஏற்பாடு செய்யப்பட்டு ஏப்ரல் 10-ம் தேதி துவக்கப்பட இருக்கிறது. 58 பேர்கள் வந்திருக்கிருர்கள். அது எனக்கு ரொம்ப மகிழ்ச்சியைத் தருகிறது. 58 பேர்கள் 1963-64-ல் என்று சொல்லிவிட்டேன் என்று அதையே ஒரு சாஸ்திரமாக வைத்துக்கொண்டு பேசக்கூடாது. மற்ற கல்லூரிகளுக்கு வைத்துக்கொள்ள நான் அங்கிகாரம் கொடுக்கமாட்டேன் என்று சொல்வதாகச் சொன்னுர்கள். சாத்தியப்படுமென்று சொன்னுல் அப்பொழுதே அல்லவா எழுதியிருப்பேன்.

* **திரு. க. அன்பழகன் :** அமைச்சர் அவர்கள் கூறுகிற அந்த ஆணைப்படி தனியார்கள் தொடங்கும் கல்லூரிகளில் தமிழில் பயிற்றுவிக்காவிட்டால் கிராண்ட் தரமாட்டோம் என்று ஏற்றுக் கொண்டிருந்த உறுதியை அமைச்சர் அவர்கள் தங்களால் தமிழில் கொண்டுவர முடியவில்லை என்ற காரணத்தால் கைவிட்டுவிட்டார்கள் என்று பொருளா ? அல்லது இன்னும் சில காலத்தில் ஒரு குறிப்பிட்ட ஆண்டிற்குள் பயிற்சிமொழி தமிழாக்கும் மாற்றத்தை நிறைவேற்றுவோம் என்ற உறுதியையாவது இந்த அவைக்கு அமைச்சர் தருவார்களா ?

**கனம் திரு. எம். பக்தவத்சலம் :** நான் சமர்ப்பித்த அறிக்கையில் அந்த உறுதி இருக்கிறது. நாமே ஒரு கால வரம்பு போட்டு 1963–64-க்குள் என்றது இப்போது என்ன ஆயிற்று ? நாம் எல்லா முயற்சியும் செய்கிறோம். எல்லா முயற்சியும் செய்து இது கடைசியில் ஆங்கிலத்திலும், தமிழிலும் சொல்லிக்கொடுக்கும் நிலை வரும். இருந்தாலும் நம் அகில இந்தியா விஷயம் ஒன்று. மற்ற மாநிலங்களோடு தொடர்பு வேண்டும். அம்மாதிரி பல்கலைக்கழக மாணவர்கள் படிக்க வேண்டும். இந்த மாநிலத்தைப் பொருத்த மட்டும் ஆங்கிலம் இல்லை என்ருல் எப்படி அகில இந்தியாவோடு தொடர்பு கொள்ளுவது ? எப்படிப் பரீட்சைகளில் முதன்மையாக வருவது ? இது வேண்டாமென்ருல் பெருத்த பாதகம் ஏற்படும். நான் கூட சொன்னேன். தமிழ் எம்.ஏ.,எம்.எஸ்.ஸி. அதிகமாகப் படிக்க வேண்டும் என்று வேறு ஒரு கூட்டத்தில் சொன்னேன். தமிழ் கல்லூரி இருக்கிறது. அந்த தமிழ் கல்லூரியில் விழா நடந்தது. நீண்ட காலமாக நடக்கிற திருவள்ளூர் கல்லூரி. அதிலே நான் சொன்னேன். இது மாதிரி வேறு ஏதாவது கல்லூரி வைப்பதாக இருந்தால் அரசாங்கம் வேண்டிய ஆதரவு கொடுக்

[ திரு. எம். பக்தவத்சலம் ] [30th March 1963

கும் என்று சொன்னேன். இலக்கியம் பரவ வேண்டும் என்று நான் விரும்புகிறேன். வேண்டிய ஆதரவு கொடுக்க விரும்புகிறேன். விஞ்ஞானம் வேண்டும், ஹிஸ்டரி வேண்டும் என்று அவர்களுக்கு சொன்னேன். **Humanities** பற்றி உற்சாகமாகப்பேசினேன். **Humanities** வேண்டும் விஞ்ஞானமும் வேண்டும் என்று. வேறு ஸ்கூலே எடுத்துக் கொள்ளலாம். இரண்டும் ஒன்ருக வைத்தால் பயன்படும். இரண்டு **electives** இருக்க வேண்டும். இந்த **Pupil Teacher ratio** குறித்து விளக்கி **Press note** ஒன்றுகூட வெளியிட்டிருக்கிறேம். இது **overall** நிலைமை பஞ்சாயத்து யூனியனுக்கு **overall**. இன்னும் கேட்டால் மாவட்டத்துக்கு **overall** என்று வைத்துக்கொள்ளுவதற்கு தயாராக இருக்கிறேம். ஆனல் இருக்கிற ஆசிரியர்கள் யாரையும் வேண்டியதில்லை என்று அனுப்பப் போவதில்லை. இப்பொழுது மீண்டும் சொல்லுகிறேன். மாணவர்கள் தமிழ் போதனமொழியாக எடுத்துக் கொள்ளலாம். நான் அதைரியப்படுத்துகிறேன் என்று சொல்வது தேவையில்லை. நான் போகிற கூட்டங்களில்கூட தமிழில்தான் பேசுகிறேன். மாணவர்களே நீங்கள் வாருங்கள் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். பெண்கள் கல்லூரி என்ருல் "ஆண் மாணவர்கள்தான் வரமாட்டேன் என்கிருர்கள். நீங்களாவது வரக்கூடாதா? தமிழ் போதன மொழியாக எடுத்துக்கொண்டு படிக்கக்கூடாதா?" என்று கேட்டிருக்கிறேன். இதில் அவசரப்பட்டு மாணவர்களுடைய நன்மை, நாட்டின் நன்மை, தமிழ் நாட்டு நடைமுறை ஆகியவைகளுக்கு விரோதமாக எதுவும் செய்யக் கூடாது என்பது அரசாங்கத்தின் கருத்து.

ஏதோ அரசாங்கத்தில் குழப்பம் இருக்கிறது என்று சொன்னுர்கள். குழப்பம் ஒன்றும் இல்லை. எங்களுக்கு **clear idea** இருக்கிறது. குழப்பம் என்று நினைத்தால்தான் குழப்பம். ஹிந்தி திணிக்கப்படுவது என்பது **Catchword**. திணிக்கப்படவில்லை. ஹிந்தி படிப்பது மாணவர்களுக்கு நல்லது. இது அக்கிரமம், அநியாயம் என்றெல்லாம் சொன்னுர்கள். அதற்கெல்லாம் ஒன்றும் இடமில்லை.

சர்க்காரின் ஒரு வெளியீட்டைப்பற்றி தவறுதலாக இருக்கிறது என்று சொன்னுர்கள். அந்த வெளியீட்டைப் பொறுத்தமட்டில் **proof correct** பண்ணி அனுப்பிய பிறகு அந்த **proof**ல் இருக்கிற திருத்தங்களை **carry out** செய்யாமல் ஏற்பட்டது. சர்க்கார் பாடபுஸ்தகங்களை எழுதுவதை ஒரு சிலர் விரும்பவில்லை. **Vested interest** விரும்பவில்லை. அதில் பலவித கோளாறுகள் இருக்கின்றன. தமிழ் பண்டிதர்களை வைத்து திருத்த வேண்டும் என்பதில்லை. அவர்கள் திருத்திஞல் அந்த தமிழ் சரியாக இருக்கவேண்டும் என்பதல்ல. நான் இப்பொழுது பல திருத்தங்களைப் பார்த்தேன். யார் தகுதி உடையவர்களோ அவர்களை வைத்து தவறு இல்லாமல் வெளியிடவேண்டும் என்பதுதான் என் எண்ணம் என்று கனம் அங்கத்தினர்களுக்குத் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

கனம் அங்கத்தினர் டாக்டர் சிதம்பரநாதன் அவர்கள் பரீட்சை வைப்பதைப் பற்றி ஒரு கருத்துத் தெரிவித்தார்கள். நான் அவர்களுக்குக் கூறினேன். ஒரு சிலர் வேண்டுமென்ருல் 6 மாதத்துக்கு வைத்துக் கொள்ளுவது என்ருல் அது முன்னமே முடிவு செய்ய வேண்டும். 6 மாதத்துக்கு தோன்றி அப்புறம் மாறும். பொதுவாக பரீட்சை வைத்து விடுகிறேம். அவரவர்களுக்கு எந்த வகையில் பயன் படுத்திக்கொள்ள வேண்டுமோ அந்த வகையில் பயன்படுத்திக் கொள்ளலாம் என்று சொல்ல விரும்புகிறேன். மத்திய அரசாங்கம் தாராளமாக உதவி அளித்துக்கொண்டிருந்தது. இப்பொழுது குறைந்து கொண்டிருக்கிறது. இப்பொழுது இருக்கிற நிலையில் நான் கூறுவேன். இந்த **electives** அமுலுக்கு வருகிற பொழுது **electives courses**—ஒடு இணைக்கப்படும். இதெல்லாம் வைத்து தான் **electives** வைத்து இருக்கிறேம். இந்த **elective**-ல் இது போய் சேர்ந்துவிடும் என்று நான் நினைக்கிறேன்.

கடைசியாக கனம் அங்கத்தினர் அவர்கள் பேசியது மிகுந்த மகிழ்ச்சி. மத்திய ஆட்சியில் **committee** போட்டிருக்கிருர்கள். ஆனல் நம் அரசாங்கம் கூட முதலிலே பேசும்போது விளக்கினேன். ஏதோ பரிசீலனை

30th March 1963] [ திரு. எம். பக்தவத்சலம் ]

செய்திருக்கோம். **Committee** இருக்கிறது. **Secondary Education Committee** 5 ந் தேதி வருகிறது. நான் அவர்களை சந்திக்கப் போகிறேன். அது இல்லாமல் வேறு ஒரு கமிட்டி இருக்கிறது. ஆரம்பக் கல்விக்கு. கல்லூரி படிப்பு **Committee** இருக்கிறது. அது நடந்துகொண்டிருக்கிறது. அதனால் இந்த முடிவற்ற நிலையை வைத்துக்கொண்டு போவது சரியல்ல. உண்மையிலே தவறுதலாக எடுத்துக் கொள்ளக்கூடாது. அவரே ஒன்று சொல்லுவார். "ஐயர் வருகின்ற வரையில் அமாவாசை காத்திருக்காது" என்று. ஆகையினாலே நம்மைப் பொருத்தமட்டில் இந்த குழப்ப நிலைமையை அகற்றி விடுவோம். முடிவற்ற நிலைமையை அகற்றி விடுவோம். நம் மாணவ மாணவிகளுக்கு எது உகந்ததோ அந்தப் படிப்பை நாம் ஏற்பாடு செய்வோம். அதற்குப் பிறகு மத்திய கமிட்டியில் புதிய யோசனை சொன்னால் அதை எப்படி இதில் இணைப்பது என்று பார்ப்போம்.

**திரு. கே. எஸ். அப்துல் வஹாப் :** அடிக்கடி மாற்றங்கள் ஏற்படக் கூடாது இந்த திட்டம் நிறைவேற்றுவதில் என்று அபிப்பிராயம் தெரிவித்த காரணத்தால் அதை பொறுத்து கேட்கிறேன் ?

**கனம் திரு. எம். பக்தவத்சலம் :** அதுதான் என்னுடைய கருத்து. அரசாங்கத்தின் கருத்து. இதை **skeleton** ஆக வைத்து இருக்கிறோம். **flexible** ஆக வைத்து இருக்கிறோம். இப்பொழுது திரு. ராஜா அய்யர் பேசினார்கள். மாற்றங்கள் எல்லாம் கல்வி நிபுணர்கள், ஆசிரியர்களைக் கலந்து ஆலோசித்து இதற்கு ஒரு தனிக் குழு அமைக்கலாம் என்று எண்ணுகிறேன். இதை ஒரு **skeleton** ஆக வைத்து இருக்கிறோம். இந்த நிலையில் மேலும் இந்த முடிவற்ற நிலைமை நீடிக்காமல் முக்கியமாக 10 ஸ்டாண்டர்டு, 11 ஸ்டாண்டர்டாக மாற்ற வேண்டியது. **Higher Secondary Course** இருக்கிறதா, இல்லையா என்று முடிவு செய்து பின்னாலே வேறு ஏதாவது நல்ல யோசனை ஏற்றுக்கொள்ளக்கூடிய யோசனை வந்தால் இதிலே கல்வித் திட்டத்திலே புகாருக்கு இடம் கொடுக்காமல் நாம் எதை ஏற்றுக் கொள்ளக்கூடியதோ அதை ஏற்றுக்கொள்ளலாம். ஆகவே இந்தத் திருத்தங்களை வற்புறுத்தாமல், மற்ற திருத்தங்களை வற்புறுத்தாமல், கனம் அங்கத்தினர் திரு, ராஜாராம் அவர்கள் திருத்தத்தை நான் ஏற்றுக் கொண்டிருக்கிறேன். இந்தத் திட்டத்தை கனம் அங்கத்தினர்கள் எல்லோரும் ஏற்றுக் கொள்வதோடு இது சரியான முறையில் நடத்துவதற்கும், மாணவ மாணவிகள் நல்ல படிப்பு படித்து அறிவைப் பெருக்கிக் கொள்வதற்கும் உகந்த வகையில் ஒத்துழைக்கவேண்டுமென்று கேட்டுக்கொண்டு என் வார்த்தையை முடித்துக் கொள்ளுகிறேன்.

**திரு. க. அன்பழகன் :** அமைச்சர் அவர்கள் ஹிந்திமொழி கட்டாயமில்லை என்ற கருத்தைத் தெரிவித்தார்கள். மூன்று மொழி ஏற்றுக் கொள்ளப்பட்டிருக்கிறது என்று தெரிவித்தார்கள். இந்த இரண்டு கருத்துக்களிடையில் மூன்று மொழி கட்டாயம் என்று ஏற்றுக் கொள்ளப்பட்டு எல்லோரும் படிக்க வேண்டும் என்ற நிலை இருக்குமானால் ஹிந்தி தவிர இந்த நாட்டிலே உள்ள பெரும்பாலான மாணவர்கள் படிக்கக் கூடியதாகப் பிறிதொரு மொழி இயல்பாக அளிக்கப்படாத நிலையில் ஹிந்தியைக் கட்டாயமாக்காமல் இருக்க அமைச்சர் என்ன வழிவகை செய்திருக்கிறார்கள் ? 4–10 p.m.

**கனம் திரு. எம். பக்தவத்சலம் :** ஹிந்தி படிக்கத்தான் வேண்டும். ஆனால் ஹிந்தி வேண்டாம் என்று இருந்தால் தெலுங்கு படிக்கலாம். மலையாளம் படிக்கலாம். அதற்குப் போதிய மாணவர்கள் வந்தால் ஏற்பாடு செய்யப்படும். இப்பொழுது இரண்டு வேறு இந்திய மொழி என்று போட்டிருக்கிறோம். ஹிந்தி படித்தால் ஏதோ படிக்கட்டும். ஆனால் ஹிந்தி கூடாது என்று சொன்னால் தெலுங்கு படிக்கலாம். அதற்குப் போதிய மாணவர்கள் வந்தால் ஏற்பாடு செய்யப்படும்.

MR. CHAIRMAN : I shall now put the amendments to the vote of the House. The first one is from Dr. A. Chidambaranathan.

[30th March 1963

DR. A. CHIDAMBARANATHAN : Mr. Chairman, in view of the amendment moved by Mr. Rajaram by which it is sought to have an examination for History and Geography. I withdraw my amendment.

The amendment was, by leave, withdrawn.

VIDWAN T. MUTHUKANNAPPAN : I withdraw my amendment, Sir.

The amendment was, by leave, withdrawn.

MR. CHAIRMAN : The third amendment is from Sri K. Anbazhagan and Sri R. Venkatachalam.

SRI R. VENKATACHALAM : I press my amendment, Sir.

MR. CHAIRMAN : The question is—

" Add the following at the end :

' and on such consideration, this House do not approve :

(i) the introduction of public examination in part II for S.S.L.C. and the proposal that the marks obtained will be counted for moderation ;

(ii) the non-replacement in all colleges in the degree course by 1963–64 of English medium by Tamil medium in Humanities as originally envisaged;

(iii) the non-introduction of Tamil medium in Humanities in P.U.C.;

(iv) the proposal to introduce two electives in new X and XI Standards such science subjects as Physics, Chemistry and Biology while no minimum equipment is provided in 75 per cent of the schools in rural areas, even for the teaching of General Science;

(v) the present policy adopted in fixing the number of teachers in elementary schools in the ratio of 1 : 35 and the granting of additional teacher only if the number of pupils rises to 70 and more."

The amendment was put and lost.

MR. CHAIRMAN : I now put the amendment of Sri K. Rajaram to vote—

" Add the following at the end :

' and on such consideration the House while approving the Educational Pattern enunciated in the note is also of the opinion that History and Geography should also be subjects for examination. "

The amendment was put and carried.

30th March 1963]

MR. CHAIRMAN : I shall now put the original Motion as amended to the vote of the House: The question is—

" That the Educational Pattern as enunciated in the note placed on the Table of the House on the 25th March be taken into consideration and on such consideration the House while approving the Educational Pattern enunciated in the note is also of the opinion that History and Geography should also be subjects for examination ".

The motion was put and carried.

VI.—GOVERNMENT BILL.

THE INDUSTRIAL DISPUTES (MADRAS AMENDMENT) BILL, 1963 (L.A. BILL NO. 7 OF 1963).

* THE HON. SRI M. BHAKTAVATSALAM : Mr. Chairman, Sir, I move—

"That the Industrial Disputes (Madras Amendment) Bill, 1963 (L.A. Bill No. 7 of 1963), as passed by the Asstmbly, be taken into cnsideration".

Under Section 2 (*n*) (vi) of the Industrial Disputes Act, 1947, the appropriate Government can declare only those industries specified in the First Schedule to the Act as public utility services. The leather and oxygen and acetylene industries have not been included in that Schedule. The Government have received representations requesting that the leather industry may be declared as a public utility service under the said Act. The process of leather tanning consists of various stages stretched over a period of thirty days and if the profess at one stage were to be interrupted even for a few hours the skins and hides would get damaged, and consequently the threat of strikes with little or no notice to the managements should be elimnated. It has also been represented that the oxygen and acetylene industry is vital for the defence and economy of the country and that any sudden interruption in the production and distribution of their products will seriously dislocate important industries and institutions. It is, therefore, considered that the First Schedule to the Industrial Disputes Act, 1947, should be amended to include the leather and the oxygen and acetylene industries so as to enable the Government to declare the said industries as public utility services. The legislation is therefore necessary to give effect to the decision. The concurrence of the Government of India to the said Bill has also been obtained.

I move that the Bill be taken into consideration.

MR. CHAIRMAN : The question is—

" That the Industrial Disputes (Madras Amendment) Bill, 1963 (L.A. Bill No. 7 of 1963), as passed by the Assembly, be taken into consideration ".

---

* Printed as Appendix on page. 196